உ கணபதிதுணை.

# நாகமகூளப்பநாயகன்

# காதல்.

சுப்பிரதிபகவிராயரால்

பாடப்பட்டது.

திருத்தணிகை-

சரவணப்பெருமாளையரால்-

பரிசோதிக்கப்பட்டு

இவராலும்.

பொய்கைப்பாக்கம்

அப்பாசாமிமுதலியாராலும்

சென்னபட்டணத்தில்-

கல்விவிளக்கவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விளம்பி௵ ஐப்பசி௴.

விஷய- ௲௮௱-௮.



உ கணபதி துணை.

# கூளப்ப நாயக்கன் காதல்.

## காப்பு.



### வெண்பா.

போரும்பெஞ்சைப்பெரியநாகேந்திரன்மேற் ...... *
சீராருங்காதலையான்செப்பவே-நேராரும் .......... *
அக்கனிதாச்சொலிமுனப்பனைவலத்தில்வரும் .... ... *
கைக்கசமுகக்கடவுள்காப்பு .......................... *

பொன்மாதுமேவுதிம்மராயரருள்பூண்டிருக்கும் - *
நன்மாணிதிபெரியநாகயன்மேற்காதல்சொல. - - (௧)

வந்துதவுசொன்மதுரவாக்குதவிப்பொருளுந் - - *
தந்துதவவேண்டுமெங்கள்தந்திமுகத்தானே. - (௨)

ஆளும்பெருமாளகோபிலமால்மெய்யருளுந் - - *
சீருநற்பெறும்பெரியநாகயன்மேற்காதல்சொல. - -(௩)

ஏடுமணிவடமுமேந்துஞ்சரஸ்வதியே - - - *
பாடுமயிலேறிவருமையனே முன்னடவாய். - - (௪)

கோமுனிவர்கொண்டாடுங்கூடற்பரஞ்சோதி - *
மாமுனிவர்செம்பொன்மலர்ப்பாதநான்மறவேன். - (ரு)

நாட்டுபுகழ்ப்பெரியநாகயன்மேற்காதலைநான் - - *
சூட்டுகவிநாவலர்முன்சொல்லத்துணிந்ததுதான். - - (சு)

தானந்தவயோகதத்துவமில்லாவொருவன் - - *
ஞானந்தெளிந்தவர்க்குநல்லறிவுசொல்வதொக்கும். - (எ)

தெள்ளமிர்தமூட்டியுணாதித்திவளர்த்தெடுத்தோர் - - *
கிள்ளைகுழறுமொழிகேட்டுமகிழ்வதுபோல். - - (அ)

நன்னயவில்வேள்பெரியநாகேந்த்ரனென்கவியி - - *
லென்னவழுக்கண்டாலுமின்பமெனக்கொண்டருள்வான். (கூ)

தேனளந்தகானவர்க்குத்தேவரமுதளக்க - - *
வானளந்துநிற்கும்வராககிரிவேந்தன். - - (ய)

கன்னியமுனையொடுகங்கைகலந்ததுபோற் - - *
பொன்னிகலந்தபுனற்குடபமாநதியான். - - (யக)

வண்ணக்குவிமுலையார்மஞ்சள்நீராறோடிப் - - - *
பண்ணைப்பயிர்வளர்க்கும்பாண்டிவளநாடன். - - (யஉ)

வட்டமதிக்களங்கமாறத்தடவுதல்போல் - - - *
இட்டகொடியாமியல்சூழநகபுரியான். - (யங)

கொத்தார்கருங்குழலார்குத்துமுலைபாயமணி - - *
த்தாரம்பின்னவிடுமுல்லைதொடைமார்பன். - (௰௪)

ஓகைதந்துபோர்க்களத்திலுட்புகுந்துதான்முடுகி - - *
வாகைதந்துமீண்டுவரும்வாகைநடனப்பரியான். - (௰௫)

சண்டையிற்பொருங்கொடித்தலந்தகர்த்துவஞ்சரைக்கைக் - *
கொண்டெடுத்தறைந்துரப்புகும்பவுக்ரகுஞ்சரத்தான். (௰௬)

விண்பிறையைவெல்லநிலமீதின்முளைத்தெழுந்த - *
தண்பிறைபோலோங்குந்தவளக்குடையுடையான். - (௰௭)

உடைதிரைகள்குமுறுகடலொலியுமுகிலிடியுமென - - *
லடையலர்கள்செவிகுடையவதிருமொலிமணிமுரசான். (௰௮)

அஞ்சினார்வாக்கிலிருந்தம்புபோலோடிமட்டு - - *
மிஞ்சினார்மார்புருவிவீழ்படக்குமாணையினான். - (௰௯)

வட்டநிலம்புரக்குமாரன்குமாரவர்க்கப் - - *
பட்டமெனக்கட்டிவைத்தபட்டாபிஷேகபரன். - - (௨௰)

மிக்கவருட்சொக்கேசர்மீனாட்சிதம்மருளால் - *
திக்குவிசயஞ்செலுத்துகின்றசெங்கோலான் - (௨௧)

சீற்றமுடனேதான்சிவிகையினிலேறுமுன்னே - - *
வேற்றரசர்பின்னிடப்போர்வென்றுவருஞ்சேனையினான். (௨௨)

கற்கோட்டையென்றவர்மேற்கண்சிவந்துகண்டவர்செம் - *
பொற்கோட்டையென்னப்புகழுநிலக்கோட்டையினான். (௨௩)

சிந்தமகளேந்திரசெகராசன்கண்மணிபோல் - - *
வந்ததுறைச்சிங்கமெங்கள்மால்பெரியநாகேந்த்ரன். - (௨௪)

வாணிபுகழ்வல்லக்கர்வார்குலத்தைக்கொண்டுவந்த - - *
தோணியெனும்பெஞ்சைத்துறைபெரியநாகேந்த்ரன். (௨௫)

பொன்னிலங்கவச்ரப்பொடியிலங்கப்பொற்கதவு - - - *
முன்னிலங்கப்பின்னிலங்கமுத்திலங்குவாசலினான். - (௨௬)

ஒட்டகடமானத்தொலிமுழங்கப்பேரிகைதம் - - - *
பட்டமுழங்கப்பரிமுழங்கும்வாசலினான். - - (௨௭)

கட்டிவருஞ்சிங்களத்தார்கப்பம்வரக்காரானைக் - *
குட்டிவரச்சீனர்திறைகொண்டுவரும்வாசலினான். - (௨௮)

ஆடைவழங்கவனம்வழங்கயாசகர்க்கு - - *
மாடைவழங்கமனுவழங்கும்வாசலினான். - (௨௯)

சேலாடுங்கூர்விழியார்சென்றாடக்கைவசந்தன் - - *
கோலாட்டப்பங்கயப்பெண்கூத்தாடும்வாசலினான். - - (௩௰)

மாமறைநூல்பொய்த்தாலும்வாரிதிநீர்பொய்த்தாலுஞ் - *
சோமரவிபொய்த்தாலுஞ்சொன்னமொழிபொய்யாதான். (௩௧)

அண்டர்தருவுக்குமருங்காமதேனுவுக்குங் - - *
கொண்டல்தனக்குங்கொடையயிற்று சங்கரத்தான். - (௩௨)

சித்தசராசேந்திரன்திருமலைகண்டமன்னன் - - *
மைத்துனவேளாகவரும்பெரியநாகேந்திரன். - (௩௩)

நீளும்பெருவாழ்வுநீதிகளுமேமேலோங்க - - - *
ஆளும்புவிபுரக்குமந்நாளிலேயொருநாள். - - (௩௪)

ஆரணஞ்சேர்வையையருந்தீர்த்தந்தானாடி - - *
நாரணனைத்தாள்போற்றிநாமதீர்த்தம்பருகி. - (௩௫)

மிக்ககனகாரியப்பேர்வித்துவசனங்கள்துரை - - *
மக்களுடனின்பரசவுர்க்கவமுதருந்தி. - - - (௩௬)

சந்தனங்கஸ்தூரிசவாதுகதம்பம்பூசிச் - - - *
சுந்தரஞ்சேர்முத்துத்துராயிலங்கப்பாகைகட்டி. - (௩௭)

மாணிக்கம்பச்சைவயிரவயிடூரியபத்தா - - - *
லாணிப்பொன்றூர்சமைத்தவாபரணமுந்தரித்து. - (௩௮)

சங்கீதம்பாடச்சகலசனமும்போற்றச் - - - *
சிங்காசனக்கொலுவிற்றேவேந்தன்போலிருந்தான். - (௩௯)

அந்தமணிமண்டபமாமாஸ்தானந்தன்னிலயன் - *
சிந்தையுற்றவேட்டையின்மேற்சென்றுவரவேண்டுமென்று.௪௰

கட்டியாரைநோக்கிக்கனவேட்டைக்காரருக்கும் - *
பட்டணத்துச்சேனுபதிகளுக்குஞ்சொல்லுமென்முன். - (௪௧)

அங்கிருந்தகோமானரண்மனையினுட்புகுந்து - - *
தங்கமோக்கென்னத்தயங்குநிசார்தொட்டிறுக்கி. - (௪௨)

துப்பட்டாகட்டிவச்ரச்சோடிட்டுத்துணிகட்டி - *
யொப்பிட்டார்கச்சையுடைப்பட்டையூடுகட்டி. - (௪௩)

வர்ணமணியாழிவனசமலர்க்கையிலிட்டுச் - - - *
சொர்ணமயமாச்சமைத்ததோற்கவசங்காலிலிட்டு. - (௪௪)

வாய்ந்தவுறைவிட்டால்மருவலர்கள்மார்புறையாய் - *
பாய்ந்தசமுதாடுபாங்கனைத்துவிற்பிடித்து - - (௪௫)

கேழல்புலியானைக்கெர்வங்களையடக்க - - - *
வாளிமலைமுழைவிட்டாலித்தெழுந்ததுபோல். - (௪௬)

புள்ளிருந்தகூர்நெடுவேற்பொசனரண்மனையி - - *
னுள்ளிருந்துகோட்டையொலிமுகத்துவாசல்வந்தான். (௪௭)

கொற்றக்குடைபிடிக்கக்கொம்பூதப்பேரிகையும் - *
வெற்றிமுரசுந்தொனிக்கவீரசின்னந்தான்முழங்க. - (௪௮)

காலின்கடுமைதனைக்காற்கடுமையாக்குமிதன் - - *
காலின்கடுமையெனுங்கந்துகமேற்கொண்டருளி - (௪௯)

வெற்றிவடிவாள்பிடித்துவெம்பரியின்மீதேறிச் - - *
சுற்றமெனச்சுற்றுந்துரைமக்கள்சூழ்ந்துவர, - (௫௰)

வீரிபப்ரதானிகளுமெச்சுதளகர்த்தர்களுந் - - *
காரியப்பேர்மணியகாரர்கருணீகர்களும். - - (௫௧)

தாக்குதுடியூழியப்ரதாபவசீகரரும் - - - *
ஆக்கமிகுஞ்சேர்வையானகுதிக்காரர்களும், - - (௫௨)

அச்சமில்லாராறுவப்பேரத்தனையுஞ்சோடுகட்டிக் - *
கச்சைகட்டியாயுதமுங்கையுமாய்முன்னடக்க. - (௫௩)

சிங்கத்தையாறுவுஞ்சென்றுகுத்திவெங்கோமான் - *
தங்கப்பதக்கந்தனைவாங்கவேண்டுமென்றும். - (௫௪)

கண்டபெரும்புலியைக்கைவேலாற்கொன்றுபுலித் - - *
தண்டைமிகுவிருதுதான்வாங்கவேண்டுமென்றும். - (௫௫)

துட்டஞ்செயும்புலியைச்சுட்டநல்வெம்புலித்தோ - *
லொட்டுமபரிசைக்குறித்துவரவேண்டுமென்றும். - (௫௬)

வெண்கவரிவெங்கள்திம்மராயருக்குவீசவெள்ளை - - *
வண்கவரிமானைவெட்டிவால்துணிக்கவேண்டுமென்றும். (௫௭)

வைத்திடும்வைப்பாட்டிபிள்ளைமார்புக்குடைமைபண்ணக் *
குத்திப்புலிநகங்கள்கொணர்ந்துவரவேண்டுமென்றும். - (௫௮)

கொண்டவிளையகுடியாள்மூடிமயிர்க்கு - - - *
மண்டுகருங்கவரிவால்துணிக்கவேண்டுமென்றும். - (௫௯)

வாய்த்தகரடிமணியிரர்பிச்செடுத்துக் - - - *
கூத்திக்கிடுமருந்துகூட்டியிடவேண்டுமென்றும். - (௬௰)

ஒன்றொன்றொருவர்மனநூற்றுச்சிலமோக - - *
வென்றிவெடிக்காரர்வேற்காரர்முன்னடக்க. - - (௬௧)

தானைபிடித்தசவளப்பெருக்கமுயர் - - - *
வானம்விழுதுவிட்டவண்ணமாய்முன்னடக்க - - (௬௨)

கொண்டேகுந்தன்மேளக்கொள்கைபோற்பேசுமூகி - *
லுண்டோவிலையோவென்றொட்டகமணைந்துவர. - - (௬௩)

கொட்டுந்துடியுங்குறித்தகரிக்கொம்புகளுங் - - *
கட்டும்பெருவலையுங்கைவேட்டைக்கத்திகளும். - - (௬௪)

காட்டுப்புலிக்கழுத்தைக்கௌவும்புலிபோலக் - - *
கூட்டமிட்டஞாளிகளுங்குத்தீட்டியுங்கவணும். - (௬௫)

சால்வயிறுமூன்றுமுழத்தாடிகளுஞ்செந்தலையுங் - - *
காலிலிடுதோலடியுங்காங்கிட்டகசசையுமாய் - (௬௬)

கானவர்கள்வந்துகண்டுகைகுவித்துமுன்னோடச் - - *
சேனைநடுவெள்ளைச்செயடாலிணைத்துவர. - - (௬௭)

போயனுமன்பாய்ந்தபுகழ்பெருமற்கரிணைப் - - - *
பாயத்திரிவதுபோற்பைங்கருடடாலேக. - - (௬அ)

சந்த்ரோதயம்போற்றயங்குஞ்சுருட்டிவரச் - - - *
செந்தூளிகண்டுவேடசினங்குடிவாங்க. - - - (௬௯)

தம்பட்டவோசைதனக்குமகதங்கலங்க - - - *
கொம்புத்தொனிகேட்டுக்கொச்சிமலையேற - - (எ௰)

மங்களஞ்சேர்பெஞ்சைநகர்வாழ்பெரியநாகேந்த்ரன் - - *
எங்கள்பிரான்வேட்டைக்கெழுந்தருளுமவ்வழியில். - - (எக)

போத்தொன்றிடத்திருந்துபோய்வலத்தோர்பூமரத்தில் - *
வாய்த்தபேடொன்றைமருவிக்குரலெழுப்ப - (எஉ)

மண்டலிகர்கண்டனெனுமால்பெரியநாகயவுத் - - - *
கண்டனதுகண்டுநகைதந்துமனமகிழ்ந்து - - (எங)

ராசசகுனமென்னராசேந்த்ரன்முன்னேடி. - - - - *
யோசனையினுற்சகுனவுண்மையறிந்தானொருவன். - (எச)

வந்தெதிரேபோத்துவலம்பாயக்கண்டதனல் - - *
மூந்தவிந்தவேட்டைமுழுவேட்டையாய்க்கிடைக்கும். - (எரு)

தக்கில்வனப்பேட்டைக்குரலெழுப்பிக்கூடியதாற் - *
கைக்குள்வசமாகவின்றோர்கன்னிமணம்கூடுமென்றான். (எசா)

அவ்வார்த்தைசொல்லமகாராசீறுங்கூளேந்த்ரன் - - *
மைவாய்த்தபன்றிமலைச்சாரல்வந்தணுகி. - - (எஎ)

நாலிடமுங்கானவரைநாடிவலைகட்டவிட்டு - - *
கோலியகட்டாப்பிற்குழற்காரரைநிறுத்தி. - (எஅ)

எறும்பரிவிட்டிறங்கிப்படைக்கலிப்பு - - *
மீறுந்தொனிமுரசுமேகங்கள்போல்முழங்க. - (எகூ)

வேலாளும்வில்லாளும்வெல்லுமெறியீட்டிக் - - *
காலாளுமாய்ப்பரந்துகாட்டைக்கலைத்துவிட்டார். - (அய)

பன்றிமுயல்கரடிபாய்புலிபுல்வாய்கடமா - *
ஒன்றொடொன்றுதட்டுண்டுலைந்துகலைந்தோட. - (அக)

எய்வாரும்வேலாலெறிவாருமொன்றையொன்றை - *
வைவாருஞ்சுற்றிமறிப்பாருமாய்நெருங்க. - - (அஉ)

கட்டாப்பில்வந்தகடமாவைப்பின்வாங்க - - *
ஒட்டாமற்குத்தியொளியிருந்தபேரிழுக்க. - (அங)

சுட்டபுகைவழியேதூக்கவரும்பன்றியுடல் - - *
தட்டுருவியோடத்தகட்டலகில்வேல்பாய. - - (அச)

வாலடித்துமேல்பதுங்கிவாய்பிளக்கவாய்கிழிக்க - *
வேல்பிடித்துவீரர்குத்தவீழ்புலிக்குமேல்துடிக்க. - (அரு)

வலையில்விழகாடுமுயல்மனையின்மிசைசருமலிவிழ - *
அலகின்மிசைபிடரின்மிசையடிகள்விழவுடல்பதற. - (௮௬)

செவ்வியோன்வேசிகையிற்சிக்கியுழல்வதுபோற் - *
றவ்வியநாய்க்காலிற்கவரிமான்வீழ்ந்துழல. - (௮௭)

கூடுமயிற்கூட்டங்கொடுக்கின்றதாதாவைப் - - *
பாடும்புலவோர்கலிபோற்பறந்தோட. - - (௮௮)

வட்டமுலைமின்னார்மயக்கறுத்தயோகியைப்போற் - *
கட்டுவலையறுத்தோர்கான்மேதிபோனதும்வ. - (௮௯)

கொட்டமிடும்புலியைக்குண்டுதுன்றுங்குழலால் - - *
சுட்டதொனிவெற்பைத்தொடர்ந்துசிலையோட. - (௯௰)

எம்மானிடப்புலியுமிற்றுமுயலும்மானுங் - - *
கைம்மானுஞ்சற்றேகலங்கிமனந்தேற. - - (௯௧)

இவ்வண்ணமையனியல்வேட்டையாடவொரு - - *
செவ்வண்ணமான்வலையிற்சிக்காமலேகுதித்து. - - (௯௨)

பற்றிவரும்பேர்க்கும்பதிகுழற்குமெட்டாமல் - - *
உற்றகவிவாணனைக்கண்டோடுமுழுத்தரைப்போல். - (௯௩)

போங்கதிமைகண்டுபுகழ்பெரியராகேந்த்ரன் - - *
வாங்குசிலையும்வடிக்கணையுமாய்விரைந்து - - (௯௪)

மானோடப்பற்றியன்றுவந்தராகுராமனைப்போல் - *
தானோடப்பின்னோடித்தாவிக்குதிகுதித்து. - (௧௫)

பாரிலிறகில்லாதபட்சிபோற்செல்லநெடுந் - - *
தூரந்தொடர்ந்துதொடுங்கணைக்குப்பூசையிட்டான். - (௧௬)

மால்தொடர்ந்தமானோர்மயிலைப்பிரித்ததையன் - *
கால்தொடர்ந்தமானோர்கருங்குயிலைக்கூட்டியதே. - (௧௭)

சிங்கத்தின்குட்டிசிலையேந்திச்செல்வதுபோல் - - *
அங்கொருபூங்காவில்விடாயாறத்தனிப்புகுந்தான். - (௧௮)

துன்றுதடஞ்சுனைநீர்தோய்ந்துமலர்த்தாதளைந்து - *
தென்றல்வந்தெனையன்திருமுகத்தில்வேர்வகற்ற. - (௧௯)

கற்பகக்காவிந்திரனைக்கண்டுமலர்சிந்துதல்போற் - *
பொற்புடையோன்மெய்குளிரப்பூங்கானம்பூச்சொரிய. - (௨௰)

சந்தனத்தின்மீதிருந்துசஞ்சரிக்கும்பைங்கிளிகள் - *
சிந்தமன்செய்க்கின்பம்வரச்சிந்துகவிபாட. - - (௨௧)

இங்கிருக்கும்வேளைநல்லவேகாந்தவேளையென - - *
மங்கைநல்லாள்தூதுவிட்டவண்டுபோல்வண்டினாய. - (௨௨)

மையல்கொண்டமன்னனுக்குமாலையிடவந்துநின்ற - *
தையலார்போலச்சரக்கொன்றைக்கொம்பிலங்க, - (௨௩)

நங்கோன்துரைபெரியநாகேந்திரனவ்வனத்தில் - - ✻
சிங்காரம்பார்த்துலவிச்சிந்தைமகிழ்ம்போதில். - (௱௪)

சாதியொருநான்கின்முதற்சாதியபதுமினியா - - ✻
மாதுநவரத்னமாலையெனும்பெண்பெருமாள். - (௱௫)

மதனகலைவாணிமதனசாதானி - - - - ✻
மதனாதிக்கேணிமதனசுபகல்யாணி. - - (௱௬)

காமகுருபீடங்காமக்கொலுக்கூடங் - - - ✻
காமகிரீடமின்பக்காமக்கடலோடம், - - (௱௭)

மாமுனிவர்வேதவங்கமாமுனிவரந்தரங்க - - ✻
மாமுனிவருந்துசங்கமாமுனிவர்பிராணலிங்கம். - (௱௮)

தெய்வாதிதேவிதெய்வகுணவாவி - - - - ✻
தெய்வச்செழுங்காவிதெய்வமலைச்சஞ்சீவி. - (௱௯)

கம்மியன்கையாலடித்துக்காய்ச்சிவெட்டித்திராமல் - ✻
செம்மலரோன்கைம்மலராற்செய்துவிட்டபொற்பாவை. (௱௰)

வாய்பேசாவண்ணமதிலொட்டிதில்லாமல் - - ✻
தாயபேசப்பேசியின்பந்தந்துலவுருபசித்ரம். - (௱௰௧)

கையாற்பிடித்தொருவர்கட்டவிதழ்கன்றுமல் - - ✻
மையார்குழலார்மடியிருக்கும்பூமாலை. - - (௱௰௨)

காற்றிலடிபட்டலைந்துகண்முத்தரும்பாமல் - - *
போற்றிமடவார்வளர்த்தெடுத்தபூங்கரும்பு. - (௱௰௩)

மொய்க்குமணங்குன்றிமுகங்கருகிவாடாமல் - - *
மெய்க்குமணமெத்தாளும்வீசுமருக்கொழுந்து. - (௱௰௪)

பொங்கிச்சிவந்துகறுத்துப்புழுங்காமல் - - *
தங்கநிறமாகச்சமைந்தமணப்பாகு. - - (௱௰௫)

ஓங்குமலைக்காட்டினுள்ளிருந்து தூங்காமல் - - - *
தூங்குசப்ரமஞ்சமிசைதூங்குநவாசத்தேன். - (௱௰௬)

மொய்த்தமலைக்காட்டுமுள்ளூடலையாமல் - - *
மெத்தையின்மேலேறிவிளையாடுந்தோகைமயில் - (௱௰௭)

கொம்புதொறும்போய்த்தாவிக்கூவித்திரியாமல் - *
அம்பொன்மணியூசலிருந்தாடுங்குயிற்பேடு. - (௱௰௮)

கொஞ்சிமொழிகுழறிக்கூட்டிற்கிடவாமல் - - *
செஞ்சொன்மதனகலைசெப்புங்கிளிப்பேடு. - (௱௰௯)

அன்னியர்க்குத்தன்னடையைக்கற்பித்தபேடையன்னந் - *
தன்னைநடைபயிற்றுஞ்சாதியனப்பேடு. - - (௱௨௰)

தேய்ந்துபோகிக்கச்சேர்ந்தகுணம்போகாமல் - - *
தோய்ந்துபோகிக்கத்துலங்குமின்றனிமுத்து. - (௱௨௰௧)

ஒப்பமிட்டசெப்பிலொளித்துக்கிடவாமல் - - *
செப்பமிட்டசெப்பிரண்டுந்தாங்கிவருஞ்சிவாத்னம். (௱௨௨)

நீறுனகாமனிமலனூர்மீதில்வைத்த - - - *
மாறுமனவயிரமாற்றவருமாவயிரம். - - (௱௨௩)

கண்ணுக்குட்கண்மணிபோற்கண்மணிக்குட்பாவையைப்போற்
பெண்ணுக்குப்பெண்ணாசைகொள்ளவந்தபெண்ணாசை. (௱௨௪)

அன்றுகுணமாலையெனுமன்பானபாக்கியைப்பார்த் - *
தின்றெனதுகண்ணிடக்கண்துடிக்குதென்றாள். - (௱௨௫)

தோளினிடப்பால்துடிக்குதெனவுரைத்த - - *
வாளிருெடுவெட்டுப்படித்தவரிவிழியாய். - (௱௨௬)

கன்னியழியாதகாரிகையேயின்றனக்குச் - - *
சொன்னதிககுபசோபனமுண்டாகுதென்றாள். - (௱௨௭)

பாங்கியுரைகெட்டுமற்றைப்பாங்கிமார்தம்முடனே - *
பூங்குழலாள்காவின்மலர்பூவெடுக்கவேண்டுமென்று. (௱௨௮)

பச்சைப்பரிமளங்கள்பாங்காய்க்கலந்தரைத்த - - *
கொச்சிமஞ்சட்பூசிக்குளித்ததிருமேனியின்மேல். (௱௨௯)

சாந்துபுழுகுசவாதுகதம்பம்பூசிக் - - - *
காந்திதரவெண்சலவைகண்டையிட்டசேலைகட்டி. - (௱௩௰)

காவிவரிநெடுங்கட்காரிகைக்குப்பாங்கியர்கள் - - *
சீவிவகுப்பெடுத்துச்சேர்த்துக்குழன்முடித்து. - (௱௩௧)

மைபொழுசிப்பொட்டெழுதிவட்டமிட்டபூண்முலைக்குத் - *
தொய்யிலெழுதித்துணையடிக்குப்பஞ்செழுதி. - (௱௩௨)

ஆடகப்பொன்மெட்டிட்டழகுவெள்ளித்தண்டையிட்டுப் - *
பாடகங்களிட்டுப்பசும்பொற்சதங்கையிட்டு. - - (௱௩௩)

முத்தாரமேகலைமேன்மூன்றரைக்குப்பொன்னரைஞாண் - *
வைத்தாரக்கட்டிமருங்கொட்டியாணமிட்டு. - (௱௩௪)

செய்யகொடிப்பவளஞ்செம்மணிகளீன்றதுபோல் - *
கைவிரலுக்கேற்கரத்னக்கல்மோதிரங்களிட்டார். (௱௩௫)

கட்டிப்பவளங்கனகவளைபொற்கடகந் - - - *
தொட்டுச்சரிலையச்சரியாகக்கைக்கணிந்து. - - (௱௩௬)

பட்டுரவிக்கையிட்டுப்பட்டையப்பொற்காறையிட்டு - *
வட்டமுலைமார்பிலங்கவச்ரச்சவடியிட்டார். - (௱௩௭)

மோகனப்பொன்மாலையிட்டுமுத்துமணிமாலையிட்டுப் - *
பூகத்தைவச்ரமணிப்பூஷணங்களால்மறைத்தார். - (௱௩௮)

வாய்க்குமொருவட்டமதிபொருமுத்தீன்றதுபோல் - *
மூக்குத்திமுத்துமுனைத்துக்கிணங்கவிட்டார். - (௱௩௯)

கொத்தளப்பொன் சேலையிட்டுக்கொப்பிட்டுவொளியிட்டுச் - *
செந்திருவிற்கேற்கத்தருவும்பிறையுமிட்டு. - (௱௪௰)

கொண்டைச்சுருட்குமுத்துக்குஞ்சிட்டுக்குப்பியிட்டுத் - *
துண்டப்பிறைக்கிணங்கச்சுட்டியொன்றுகட்டிவிட்டார். (௱௪௧

பூட்டினார்பொற்சிலைக்குப்பொன்னிடுவார்போலுடைமை *
சூட்டினார்பூமாலைசுற்றினார்தோழியர்கள் - - (௱௪௨)

ஞாலம்புகழுநவரத்னமாலைமின்னாள் - - - *
கோலஞ்சிறந்தமலர்கொய்யவென்றுதானடந்தாள். - (௱௪௩)

வங்காரமாலைமுத்துமாலைகுணமாலை - - . *
சிங்காரமாலைதிகழ்மோகனமாலை. - - - (௱௪௪)

சம்போகவல்லிசரசவல்லிகாமவல்லி - - - *
அம்போருகக்கண்ணமிர்தவல்லிநீலவல்லி. - - (௱௪௫)

மோகரத்னமாதுரத்னமுத்துவசந்தரத்ன - - *
நாகரத்னமென்னுமந்தநல்லவுயிர்ப்பாங்கியரும். (௱௪௬)

தானுமாயந்தமலர்ச்சண்பகப்பூங்காவனத்தின் - - *
மானினங்கள்சூழவரும்பிடிபோல்வந்தணுகி. - (௱௪௭)

கொய்யுமலர்வண்டெழுந்துகோகனப்பூவெனச்செங் - *
கைம்மலரைச்சுற்றக்கழுகிமலர்ப்பூவெடுத்தாள். - (௱௪௮)

பூங்கோடிபோல்நின்றலவிப்பொன்னனையாள்பூவெடுக்கப் *
பாங்கிமாரொல்லாம்பாந்தோடிப்பூவெடுத்தார். - (நாசக)

வாளையொத்தசெங்கருங்கண்மாதுனர்மதராசன் - - *
பாளையத்தைக்கொன்னையிம்பண்பாய்மலர்பறித்தார். (நாருய)

அங்குநின்றபெண்களெல்லாமங்கங்கேபோய்மறைய - *
இங்குநின்றபேதையினம்பிரிந்தமான்போல. - (நாருக

மெல்லத்தனிநடந்துவெட்சியிருவாட்சி - - *
மல்லிகைசெவ்வந்திமலர்த்தபிச்சிப்பூவெடுத்து. - (நாருஉ)

தோட்டுப்பூமுல்லைமுதற்றூயகொடிப்பூவெடுத்துக் - *
கோட்டுப்பூமீதிலந்தக்கொம்பனையாள்மாலானாள். (நாருங)

காவியிரண்டிருக்கக்கஞ்சமலாஞ்சிருக்க - - *
பூவினிறங்குன்றுப்புனமுருக்கம்பூவிருக்க - (நாருச)

கோங்கரும்பிரண்டிருக்கக்கோவையிட்டமுல்லைமுகைப் *
பூங்குமுதத்துள்ளிருக்கப்பூஞ்சண்பகமிருக்க. - (நாருரு)

பூதலத்திலேதான்பொதிவைத்திரப்பவர்போல் - *
மாதாசிபூத்தமாந்தோறுஞ்சென்றுசென்று. - (நாருசு)

சாதிறாஞ்சண்பகமேதாதுளபூந்தாதியே - - *
கோதிக்குழல்முடிக்கக்கோலமலர்தாரீரோ. - (நாருஎ)

மந்தாரையேசெருந்திமாமரமேநீயானது - - -*
சந்தாபந்தீரத்தரிக்கமலர்தாரீரோ. - - (௱௫௯)

பாதிரியேகாவிற்பனிநீர்ப்பருமரமே - - - -*
மாதவியேநீயெனக்குவண்ணமலர்தாரீரோ. - -.(௱௬௰)

விண்ணூர்ந்தபுன்னைவிருட்சமேகுங்குமமே - - -*
அண்ணூந்துநிற்குமெனக்கானமலர்தாரீரோ. - - (௱௬௧)

அம்பிட்டகண்ணாகன்றுவிட்டாருங்களைநான் - -*
கும்பிட்டேன்கோகிலங்காள்கொய்துமலர்தாரீரோ. (௱௬௨)

என்றவுரைகேட்டெழிற்குயிலும்பூங்கிளியுங் - - *
கன்றிமனநாணியந்தக்காவின்புறத்தொதுங்க. -. (௱௬௩)

பூமரத்தினீழலிலோர்பூங்கொடிபோல்நின்றலவித் - *
தாமநறுங்குழலிதானொருத்தியாகிநின்றாள். - (௱௬௪)

வந்துமிளமுலைப்பெண்ணேகாந்தமாயிருக்க - - *
நாந்தகவீரன்பெரியநாகமகூளேந்த்ரனை. - (௱௬௫)

பண்டுதனைவென்றபகைதீரக்காமனுருக் - - - *
கொண்டுசிவனைவெல்லக்கூரம்புதேடுதல்போல். - (௱௬௬)

வண்டுலவும்போதுமலர்ந்தபெருஞ்சோலைவளங் - -*
கண்டுலவும்போதெதிர்கண்டான்விழிகுளிர. - (௱௬௭)

நீரரமின்னாளோ நிசநாகக்கன்னிகையோ - - - *
சூரரமின்னாளோ சுரலோகமேனகையோ. - - (௱௬௮)

கண்ணிமையுமண்ணிலிட்டகாலுமனந்திகைத்த - - *
வெண்ணமகற்றியதாலிவ்வுலகிற்பெண்ணரசே. - (௱௬௯)

என்றெடுத்துமின்னாளிருசெவிக்குமின்பமுறக் - - - *
குன்றடுத்தபூங்காவிற்கோபாலனுரைக்கலுற்றான். - - (௱௭௰)

ஊடோதிருக்குழலகேதுமதுதிருப் - - - *
பேடோதுவார்த்தையொன்றுபேசினாலாகாதோ. - - (௱௭௧)

ஐவிரலிக்குள்ளேயடர்ந்தசிவனார்க்குத் - - *
தெய்வவடிவெடுத்தசேயிழையுநீர்தாமோ. - - (௱௭௨)

பந்தெழுப்புங்கையாற்பரனெரித்தமன்மதனை - - *
வந்தெழுப்பிக்கொண்டமகராசிநீர்தாமோ. - (௱௭௩)

பண்டுநளரூபம்பலவொடுக்கவேநளனைக் - - *
கண்டுமணமாலையிட்டகாயக்கிநீர்தாமோ. - (௱௭௪)

தெய்வரம்பைமின்னார்திருவழகெலாந்திரட்டிக் - - *
கைவருந்தவேதனுமைக்கற்பித்துவிட்டானோ. - (௱௭௫)

என்பட்டமென்றுவருமிந்திரனார்பட்டமெலாந் - *
தன்பட்டமாக்குஞ்சமத்தியார்நீர்தாமோ. -(௱௭௬)

தெண்டிரையிலோடிமலைச்செஞ்சேறிவாய்வெருவிக் - *
கொண்டல்திரிவதுங்கள்கூந்தலுக்குத்தோற்றல்லோ -(௱௭௭)

தேய்ந்தபிறையுங்கள்திருநுதலென்றலதிலே - - - *
ஆய்ந்தமணிச்சுட்டியணிந்திருக்கக்காணேனே. - (௱௭௮)

பூமன்வளைத்தபுருவத்துக்கந்தாதி - - - - *
காமன்வளைத்தகரும்புருவமொப்பாமோ - - (௱௭௯)

அவ்வேதங்கொண்டவருங்கயல்போலவேதனினி - *
எவ்வேதங்காணப்படைத்தானிருவிழியை. - - (௱௮௰)

சன்னதவெள்கீர்த்திப்ரதாபம்புரிந்தகொலை - - *
உன்னமெனமூன்றுமிருப்பதுங்கள்வாள்விழியே. (௱௮௧)

வல்லையப்போருக்கொதுங்கேன்வாள்வேல்படைக்கொதுங்கேன்
மெல்லிறல்லீருங்கள்விழியம்புக்கச்சமுற்றேன் - ௱௮௨)

தூக்குமூக்குத்திமுத்துத்தூக்காக்குமிழையுங்கள் - *
மூக்குக்குவமைசொன்றால்முத்தமிழோர்க்கொவ்வாதே(௱௮௩)

மாங்கனிகபோலமென்றும்வள்ளைகாதொக்குமென்றும் - *
பாங்கிலுவமைகண்டேன்பல்வரிசைக்கென்சொலுவேன்(௱௮௪

வித்துருமந்தன்னையுங்கள்மெல்லிதழென்றுவிதிலே - - *
முத்தங்கிடைக்குமதில்முத்தங்கிடையாதே. - (௱௮௫)

இபமானமென்மூக்கையிரிந்துமுகத்திற்கோர் - - - *
உபமானஞ்சொல்லவொருபொருளுங்காணேனே. (௱௮௬)

சங்கழுத்துமுங்கள்தனிக்கழுத்தென்றாலுகிரால் - - *
அங்கழுத்துமோலையையந்தப்பதியமாட்டாதே. - (௱௮௭)

தோளுக்குமூங்கிலிணைசொன்னாற்பெருஞ்சோதி - *
நாளுக்குமின்மினியைநாவலருஞ்சொல்வாரோ. (௱௮௮)

காந்தளனைஞ்சென்றதுங்கள்கைபோலுந்தானிருக்க - *
வாய்ந்ததவஞ்செய்துவரம்பெறுவேமென்றலவோ. - (௱௮௯)

தம்புருவைமீட்டியிசைத்தந்திதனிலேற்றறியாச் - *
செம்பவளமுங்கள்சிறுவிரலுக்கொப்பாமோ. - (௱௯௰)

வாரத்தைக்குத்தோற்றவனக்கிளியின்மூக்குமுனை - *
சேர்த்தநகமென்றுவமைசெப்பினாலொப்பாமோ (௱௯௧)

யாவினியல்கண்டுபலபாடித்தெரிந்துபெருங் -
காவியத்தைப்பாடிக்கவிஞரரங்கேற்றுதல்போல். - (௱௯௨)

மூந்தச்செழுங்கமலத்துள்ளேமுளைத்தெழுந்தோன் - *
தந்தச்சிமிள்படைத்துத்தானவுட்டந்தான்படைத்து (௱௯௩)

வம்பைச்சமைத்தவடிவுகண்டுமால்யானைக் - - *
கொம்பைச்சமைத்துக்குணஞ்சற்றதிலறிந்து. - (௱௯௪)

தேங்காயைச்செய்துதிரட்சிகண்டுபொற்குடத்தைப் - *
பாங்காகச்செய்துபணைப்பதிலேகண்டறிந்து. - (௱௯௫)

விந்தைதருமேருமுதல்வெற்பெல்லாஞ்செய்தவன்கை - *
வந்ததற்பினுங்கள்வனமுலையைச்செய்தானோ. - (௱௯௬)

காமனிமையாமல்வைத்தகண்கறுப்புப்பாய்ந்ததுவோ - *
வாமமுலைக்கண்கண்மணிக்கறுப்பையென்சொலுவேன். (௱௯௭)

சூரியனுமிந்திரனுந்தும்பிமுகத்தோனுமுங்கள் - - *
பாரமுலையின்பகையடக்கவோபிறந்தார். - (௱௯௮)

ஆலோவயிறுதனிலாலிலைமேற்பள்ளிகொள்ளு - - *
மாலோவுரோமவகுப்பழகையென்சொலுவேன். (௱௯௯)

வந்திச்சுழியைவலமாகச்சுற்றிலுநீ - - - *
ருந்திச்சுழிகளுக்குளுந்திச்சுழியாமோ. - - (௨௱)

மெல்லிநல்லீருங்களிடைமின்கொடிபோலுண்டெனவு - *
மில்லையெனவும்படைக்கவிரண்டுபிரமனுண்டோ. - (௨௱௧)

வாமமுதற்சாதிவடிவினுலல்குலுஞ்செந் - - - *
தாமரைப்பூப்போலிருக்குஞ்சந்தேகம்வேறுமுண்டோ. (௨௱௨

வாழைக்குறங்கல்குல்மண்டபமாமன்மதனுக் - - *
கேழைக்கிரங்குமிடமென்றறியேனே. - - (௨௱௩)

செவ்வாய்சௌவிநின்றசிரலவனேறுமுழந்தான் - - *
அவ்வாரலைச்சுமந்தவாமையோபொன்னடிதான். - (உ௱௪)

அஞ்சுதலைப்பாவோவஞ்சுவிரலும்படமோ - - *
மஞ்சுவாக்கண்டமடமயிலோவுன்சாயல். - (உ௱௫)

பின்னழகைக்காணில்ரதிப்பெண்ணைமதனுநிவனே - *
முன்னழகைக்காணின்முனிவர்தவஞ்செய்வாரோ. (உ௱௬)

சேடியருமில்லாமற்றேன்மொழியிரிவ்வனத்தில் - *
நாடிவரப்பெற்றதுமுன்னான்செய்தமாதவமோ. - (உ௱எ)

ஏதுமொருவார்த்தையியம்புகிலிருங்களுரை - - *
வேதமோகல்லாவின்மேவுசிவமந்திரமோ. - (உ௱அ)

மேருகிரியுமந்தவெள்ளிமலையும்பார்க்க - - *
நீருத்தரீகமெநகிழவிடமாட்டீரோ. - - (உ௱௯)

கைப்பணைவைத்துங்கள்கழுத்தின்மணமோர்த்துகொண்டால் - *
ஐயமறச்சங்கமுகமாம்பலனலவோ. - - (உ௱௰)

புனைநத்துகில்சற்றேபுறம்போகச்செய்துவிட்டால் - *
அனந்தசயனத்தலத்தையானறிந்துகொள்ளேனோ. (உ௱௰௧)

தாகமறமுத்தமொன்றுதந்தாலுமதுசக்ர - - *
வாகமுலைக்குமுத்தமாலையாச்சூட்டேனோ. - (உ௱௰உ)

## கூளப்பநாயக்கன்காதல்.

என்மார்பிலங்கநகரோகையைவைத்தாலுமது - - *
பொன்மார்பிலங்கரத்நபூஷணமாப்பூட்டேனோ. (உ௱௰௩)

பாதியுடலிற்பரமனொருபெண்ணைவைத்தான் - - *
மாதொருத்திதன்னைமணிவண்ணன்மார்பில்வைத்தான். (உ௱௰௪

செங்கமலவேதனொருதேமொழியைநாவில்வைத்தான் - *
உங்களைநானென்மனதுக்குள்ளிருத்திக்கொள்ளேனோ. (உ௱௰௫

யாமத்தாவுமூலைமந்தாமுந்தந்தானென் - - - - *
காடக்கடலைக்கடைந்தமிர்தங்காட்டேனோ. - - (உ௱௰௬)

பட்டாடைக்காமன்குளத்தையென்றன்பாரிசனை - *
விட்டாலமும்போகவினைவெற்றிக்கொள்ளேனோ. (உ௱௰௭)

வாழையடிமூக்காணிவட்டமெனக்களித்தால் - - *
வழையுழுதுபயிரேற்றிப்பிழையேனோ. - - (உ௱௰௮)

வற்றாச்சமுத்திரமாமாரணரண்மனைக்குள் - - *
அஸ்தாந்திரமெழுநியாண்மைசெலுத்தேனோ. - (உ௱௰௯)

ஆலடிச்செய்யொடாசடிவட்டம்விட்டால்முச் - - *
சாலடித்துநல்வெள்ளைசசம்பாவிளையேனோ. - - (உஉ௰)

தாண்டிமிருகத்தனிவேட்டைவந்தவனை - - - *
மீண்டுமொருகாமவேட்டைவிளையாடவிட்டால். (உஉ௧)

கொங்கைமலைபற்றிக்குரலெழுப்பியேதிறடுப் - - - *
பொங்குகலைகுலையப்புல்லுமறையுள்ளாக்கி. - - (உஉஉ)

சாய்ந்தவிழிமானிரண்டுஞ்சண்பகக்காட்டிற்குதித்துப் - *
பாய்ந்துகுயிலோடொதுங்கிநின்றுபரதவிக்க. - (உஉ௩)

மோகவலைக்குழியற்சிக்குயின்பமுற - - - *
வாகமலைப்பன்றியடுத்தொருகைபாரோமே. - - (உஉ௪)

டன்னிப்பாவென்னைவரவழைத்துநீருமது - - *
கன்னிப்போராகக்கலவிப்போர்க்கென்னைவிட்டால். -(உஉ௫)

காமத்தேரோற்றன்றுக்கட்டியிறுகக்கலந்து - - *
தாமவேல்பாயச்சமரின்முனைகாட்டி. - - (உஉ௬)

முன்னணியும்பின்னணியுமொய்த்தகுழல்வகுப்பும் - - *
பின்னிடதன்றூலியடப்ரதாபக்கொடியாட. - - (உஉ௭)

தண்டையொலிமேளந்தாளநெகிழ்ந்தகுழல் - - . - *
வண்டுபுறங்கொடுத்தமாற்றலர்கள்போற்பறக்க. - (உஉ௮)

வெம்பியெனைப்பாய்ந்தடரவிட்டதனபாரமெனும் - - *
கம்பமதயானைதனைக்கைப்பிடியாகப்பிடித்து. - (உஉ௯)

சங்குமுழங்கச்சரிபோகப்போர்முடித்து - - - *
செங்கைக்கருப்புச்சிலைமதனைவெலமேலே. - (உ௩௰)

மேலுலகந்தன்னைவிட்டுமேதினியில்வந்தரம்பை - - - *
போலுமுங்கள்யௌவனமாம்பொய்கைதனிலென்னைவிட்டால்.

ஆடையொருபக்கமணையிற்கிடக்கவிதழ் - - - -*
மூடுமிரண்டுமுளரிகளென்மார்பழுந்த. - - (உகூஉ)

ஓர்தாமரைப்பூவுகந்தென்முகத்தணைய - - - *
ஓர்தாமரைப்பூவுலாவிமுதுகைத்தடவ. - - (உகூங)

பின்னொருசெந்தாமரைப்பூப்பின்பிடரியூடுவரக் - - *
கன்னியராத்தோடுகலந்திடுப்பினூடொதுங்க. - (உகூச)

என்மீதுதாவியிருகெண்டைபோராட - - - *
மென்மாமலர்க்குமுதமெல்லமெல்லத்தேனூற. - (உகூரு)

சைவலமோர்பாற்குலையச்சங்கொலிப்பவீழ்ந்தெனது - *
மெய்குளிரத்தோய்ந்துவிரகவிடாய்தீரேனோ. - - (உகூசா)

தங்கவிளையாட்டித்தனிப்பிடமீதுசது - - - *
ரங்கவிளையாட்டுக்கழைத்தீரேயாமாகில். - - (உகூஎ)

கால்பலங்கொண்டேற்றியிருகாரானைமுட்டவிட்டு - - *
நாலுமுகத்துநடத்துபரிசுற்றவிட்டு. - - (உகூஅ)

எட்டெட்டினுக்குமிணங்கச்சகடேற்றித் - - - *
தொட்டதொட்டவாட்டமெலாந்தோலாமல்வெல்லேனோ(உகூக

காதோடுவாதாடுங்கண்மடவீரொன்றியிலே - - *
சூதாடவென்னைவரச்சொல்லியழைத்தீராகில். - -(உ௪௰)

குங்குமக்காய்ச்சோடிரண்டுங்கூட்டிக்கலந்தாடி - - *
அங்கம்பசலைக்காயத்தனையும்போகவிட்டு. - - (உ௪௧)

விந்தைதருஞ்சிவப்பைமெல்லவரநிறுத்தி - - *
அந்தக்கறுப்பையெல்லாம்பின்னேயலையவிட்டு. - (உ௪௨)

ஒருக்காலிருக்காலோடொப்பாறுமாறும் - - - *
பெருக்காகலக்கம்பிசகாமலேயாடி. - - (உ௪௩)

கண்பார்த்துநீங்கள்வெட்டிக்கட்டித்தொடர்ந்தேறிப் - *
பண்பாகவீட்டிற்படுத்துவிளையாடேனோ. - (உ௪௪)

நற்காமபூசைநடத்திடவே நீங்கள்சொன்னால் - - - *
விற்காமதெய்வவிரதந்தனிலிருந்து. - - (உ௪௫)

மோகசமுத்திரத்தின்மூழ்கிமதன்மந்திரமும் - - *
ஆகவுருவேற்றியந்தக்கரணமுடன். - - - (உ௪௬)

கன்னலொடுதேமாங்கனியருந்திச்செவ்விளநீர் - - - *
தன்னைப்பருகிநித்திரைச்சத்துருவைத்தானகற்றி. - - (உ௪௭)

சாமஞ்சாமந்தோறுஞ்சங்கநாதத்துடனே - - *
நேமமொடுபூசைநிறைவேற்றிக்கொள்வேனோ. - -(உ௪அ)

இந்நேரமென்சொற்கிளிங்குயிலொப்படியும் - - *
மின்னேயுமைக்கலந்துமேவாமற்போவேனோ. - (உ௪௧)

ஓடிவலைகட்டியொதுக்காமலேயெளிதில் - - - *
நாடியபொன்மானைநான்விட்டகல்வேனோ. - - (உ௫௦)

தாப்பானகாடுந்தடங்களையுஞ்சுற்றாமல் - - - *
வாய்ப்பாகவந்தமயிலைவிட்டுப்போவேனோ. - - (உ௫௧)

விண்டிறந்தேன்சொரியுமென்கமலப்போதுகண்ட - - *
வண்டுபடிந்துண்டுமகிழாமற்போவதுண்டோ. - (உ௫௨)

காந்தர்வநியாயமெனக்கண்டவுடனேயிணங்கித் - - - *
தோய்த்திடுகல்யாணமகாசோபனகல்யாணமன்றோ. (உ௫௩)

கானுருய்வள்ளிதனைக்கந்தனார்கூடியதும் - - - *
மாரூப்சுபத்திரையைவாள்விஜயன்கூடியதும். - (உ௫௪)

தாங்களேசம்மதித்தோதந்தைதாய்சம்மதித்தோ - - *
மாங்குயிலேயென்னைமருவுவதேகாரியங்காண். - - (உ௫௫)

மூலைக்கோட்டையுள்ளமுத்துமோகனமேயென்னை - - *
நிலைகோட்டைவேந்தனென்றுநீர்தாமறியீரோ. - (உ௫௬)

நானுநவபுரியாளாரியர்சிகாமணிநீ - - - - *
தானுநவரத்நமாலையென்றுற்றுழ்வாமோ. - - (உ௫௭)

தன்னூரக்காணாமுன்னங்காதாரச்சொற்கேட்டு - - *
நண்ணார்புகழ்பெரியநாகமகூளேந்த்ரதுரை. - (௨௭௬)

மின்னைநிறுத்திவருமேகம்போன்மோகமின்னாள் - *
தன்னைநிறுத்திவந்துதானைக்கெதிரானாள். - (௨௭௭)

கானிலிருந்தையன்வரக்கண்டோர்முகங்களெல்லாம் - *
பானுவரக்கண்டபங்கயம்போலாயினவே. - (௨௭௮)

கொண்டல்படிக்குங்கொடைப்பெரியநாகேந்த்ரன் - *
தண்டிகையிலேறியந்தச்சம்பகப்பூங்காவகன்றான். - (௨௭௯)

மந்த்ரிதளகர்த்தர்வரமாசேனைமுன்னடக்கத் - - *
தந்த்ரதுரைமக்களுடன்சந்தையூர்க்கேமுகமாய். - (௨௮௦)

வந்துநவபுரியில்வாழுமகோபிலமால் - - - *
செந்திருவின்பாதமலர்சேவித்துத்தெண்டனிட்டு. - (௨௮௧)

தீர்த்தருடன்மாலைதிருவடிபெற்றாண்மகிழ்ந்து - - *
வார்த்தைதவறாதகண்டன்மால்யானைமீதேறி. - (௨௮௨)

தாரைநவுரிதவண்டைதுடிநாகசுரம் - - - *
பேரிகையெக்காளம்பெரியமேளந்தொனிக்க. - (௨௮௩)

கஞ்சுகியர்கைப்பிரம்பர்கட்டியர்முன்கைநீட்டிப் - *
பெஞ்சைநகர்வேந்தாப்ரதாபநிகளங்கமல்லா. - (௨௮௪)

துங்காசுவாமிதுரைராசகண்டஜய - - - - *
ரங்காரணவீமராயாரவுத்ரபிண்டா. - - (௨௮௫)

தீரசுத்தவீரசுப்ரதீபகர்த்தநாவலர்க்கு - - - *
தாரசத்ருசேதநற்ப்ரதாபவஜ்ரதேகவுக்ரா. - (௨௮௬)

மகதரங்கர்கவுடர்வங்கர்வடகலிங்கர்குடகர்கொங்கர் - *
குகுதர்வந்துபணியுமிந்த்ரகொலுவிருந்தபுவனசந்த்ரா. (௨௮௭)

சாமீபராக்குபராக்கெச்சரிக்கையெனச் - - *
சோமோதயம்போற்றலங்குகுடைநிழற்ற - (௨௮௮)

பக்கக்கவரிரட்டைப்பாவாடைவீசிவா - - - *
மைக்கட்குமரியர்களாலாத்திவந்தேற்ற - - (௨௮௯)

மாலைசரியவருவார்சிலமடவார் - - - - *
சேலைசரியவருவார்சிலமடவார். - - - (௨௯௰)

தண்ணுலவும்பைந்தார்தருவானெனவோடி - - *
வண்ணாவனைதோற்றவருவார்சிலமடவார். - (௨௯௧)

தேர்புகழ்வேந்தனுடன்செல்லுமனதைப்பிடிக்க - *
ஓடுதல்போலோடியடியோய்வார்சிலமடவார். - (௨௯௨)

வல்லியனையாள்பதித்தவாய்வடுவைக்கண்டுதங்கள் - *
மெல்லிதழிற்பற்பதித்துமீள்வார்சிலமடவார். - (௨௯௩)

ஒருமானைப்பற்றிவிரைந்தோடியவாள்வேந்தன் - *
வருமானனேகமெதிர்வந்துநிற்கப்பாராமல் - (௨௯௪)

வாழிசநுவசித்திவாரணத்திற்றுனிறங்கி - - *
ஆழியனையான்பொன்னரண்மனைக்குள்வந்திருந்தான். (௨௯௫)

இங்கேதுரைப்பெரியநாகேந்த்ரன்வீற்றிருக்க - - *
அங்கேகடலர்க்காவிலன்னநடைப்பெண்பெருமாள். - (௨௯௬)

போராளன்பெஞ்சைப்பெரியநாகேந்த்ரதுரை - - *
வாராமைகண்டுமதிமறந்துமெய்சோர்ந்தாள். - (௨௯௭)

ஆனைதனைக்காணாதரும்பிடிபோய்ப்பார்ப்பதுபோல் - *
மானனையாளந்தமலர்மண்டபமுநீர்ச்சுனையும். - (௨௯௮)

தேடினாள்மூச்செறிந்தாள்செங்கமலத்தாள்சிவப்ப - *
ஓடினாளெங்கோனுருவெளியைத்தெண்டனிட்டாள், (௨௯௯)

என்னிடத்திற்கோபமேதென்றாளெழுந்திருந்தாள். - *
கன்னல்வில்லைத்தாங்கொருவன்வந்தெதிர்ப்பக்கண்டயர்ந்தாள்.

காடுருவக்காமனெய்தகைப்பாணஞ்செப்புமுலை - - *
பூடுருவவைவேலூருவியமான்போலுழன்றாள். - (௩௱௧)

காலாயுதக்கொடியோன்கையாயுதவழியே - - *
மாலாயுதமீன்றமாமணியைத்தானுயிர்த்தாள். - (௩௱௨)

## ௩. ஏப்பநாயக்கன்காதல்.

போதிபகலாமாதவியேபுன்னையேசம்பகமே. - - *
கற்பகமேயென்றலைசக்கற்பகத்தைக்காணீரோ. - (௩௱௩)

காவரசேயாயிரச்செங்கண்ணரசுபோலிருக்கும் - *
பூவரசேபென்றலைசப்புலியூரலைசக்காணீரோ. - (௩௱௪)

நன்மான்பிணைநடக்கமோகமாய்ப்பின்றொடரும் - *
பொன்மானையென்றலைசப்பூமானைக்காணீரோ. - (௩௱௫)

தோய்ந்தரவியைத்தொடர்ந்தமுகசூர்ய - - - *
காந்தமேயென்றலைசக்காந்தன்வரக்காணீரோ. - (௩௱௬)

என்னிடத்தின்மாலகிளிச்சைசொல்லிச்செர்ந்ததுரை - *
பின்னெனக்கோரந்தரங்கம்பேசாமற்போவானோ. - (௩௱௭)

கானிடத்திலனைக்கண்டுதனியாகவந்து - - *
வானவர்கோனென்னைமனமுருக்கிச்சேர்ந்தானோ. - (௩௱௮)

சூந்திரிகொள்வீணைதனையொளித்துவந்துதெய்வ - *
கந்தருவனென்னைக்கருத்துருக்கிச்சேர்ந்தானோ. - (௩௱௯)

இந்திரனேயானாற்கண்ணாயிரமென்பதுண்டே - *
கந்தருவனேயானாற்கண்ணிமைக்கக்காரியமேன். - (௩௱௰)

பெய்யுங்கொடையான்பெரியநாகேந்திரதுரை - - *
ஐயனைநத்தல்லாலையமினிவேறுண்டோ. - (௩௱௰௧)

மன்மதனைவென்றுவயங்குந்திருவழகை - - - *
என்மனதுக்குள்ளேயெழுதவோவந்தகன்றான். - (௯௱௰௨)

கூடியின்பங்கண்டகுதலைமொழிப்பேதைநம்மைத் - *
தேடிமுகம்வாடித்தியங்குவளென்றெண்ணானோ. - (௯௱௰௩)

இந்தக்கவடுசெய்வானென்றறிந்தாற்கைகலக்கும் - - *
மூந்தக்குடிலயிட்டுமூன்றானைகொள்ளேனோ. - (௯௱௰௪)

தன்னெஞ்சம்போலத்தழுவிப்பிரிந்திருக்க .. - *
வன்னெஞ்சியென்றோமறக்கத்துணிந்தானே. - (௯௱௰௫)

டேளூர்வழியேநாம்பின்றொடர்வோமென்றாலும் - *
ஓரூரொன்றுனிலையேயொன்பதுவொன்றுனே. - (௯௱௰௬)

என்றிரங்கும்வேளையிருஞ்சேவலைப்பிரிந்த - - *
அன்றிலெனத்தானேசிறியாளறிவயர்ந்தாள். - (௯௱௰௭)

இவ்விடத்தின்மெய்சோர்ந்திவள்கிடக்கவெவ்வேறாய் - *
அவ்விடத்திற்பூவெடுத்தவாயிழையாரெல்லோரும். (௯௱௰௮)

குன்றிரண்டுதாங்குங்கொடிபோலிடைதுவள - - *
நின்றுமலர்பறித்தநேரிழையைக்காணமல். - (௯௱௰௯)

மற்றோர்வனமோநாம்வந்ததெனத்திகைத்துச் - - *
சிற்றடியைக்கண்டார்திரண்டாரொருமுகமாய். - (௯௱௨௰)

சென்றார்தெருந்தூரந்தேன்மொழியேதேன்மொழியே - *
என்றார்மதிமறந்தவேந்திழையைவந்துகண்டார். (௩௨௧)

கையணையிற்சாய்ந்துகலைகுலையக்கண்முகிழ்ப்பத் - - *
தையல்கிடப்பத்தெரியாமற்பாங்கியர்கள். - - (௩௨௨)

தூக்கமோவெம்பசியோதோழியரைக்காணாத - - *
ஏக்கமோமன்மதன்கண்ணேறுபட்டகாரணமோ. (௩௨௩)

தெய்வக்குறையோநாஞ்செய்வதென்னென்றேதிகைத்துக் - *
கையாற்கலைதிருத்திக்கட்டியெடுத்தணைத்தார். - (௩௨௪)

மாந்தளிரால்வீசிமதிமுகத்தில்வெயர்துடைக்க - - *
ஏந்திழையாண்மூர்ச்சைதெளிந்தேங்கினாள்போலிருந்தாள்.

ஒண்டொடியார்மங்கையுடலிற்குறியிடங்கள் - - *
கண்டிதுவேதென்றார்கள்ளிக்கும்வாயுமுண்டோ. (௩௨௫)

கைநடுங்கிக்காணடுங்கிக்கன்னியர்களெல்லோரும் - *
மெய்நடுங்கித்தானேவிசாரமிட்டுக்கொண்டிருந்தார். (௩௨௬)

வல்லனையகொங்கைமடமானைக்கைலாகின் - *
மெல்லமெல்லத்தாநடத்திவீட்டிற்கொடுபோனார். (௩௨௭)

பாகார்மொழியாளைப்பஞ்சணையிற்சேர்த்திடவும் - *
மோகவனன்மீறமூர்த்தம்படபாரித்ததுவே. - - (௩௨௮)

முன்கைபணிவளைகண்மூச்செறியக்காய்ந்துருகி - - *
மென்குவளைக்கண்ணீரின்வெள்ளத்தாலாறியதே. (௫௫௰)

வீசியவேளம்புமெழுகுபாவைக்குணுருக் - - *
கூசிகள்போற்பாயவுருக்கூசியுள்ளயர்ந்தாள். - (௫௫௧)

கண்டசகியார்கருத்திற்சகியாராய் - - - - *
ஒணடொடிக்குச்சீதவுபசாரஞ்செய்யலுற்றார். - (௫௫௨)

செய்தவுபசாரமெலாந்தேனுள்பொருளாகி - - *
வைதுமடவாளாயனங்கொதித்துச்சொல்லலுற்றாள் - (௫௫௩)

வேடையெலாந்தீர்வென்மேல்வீசுவார்போலவெயிற் - *
கோடையெலாமென்மீதிற்கொண்டுவந்துவிட்டீரோ. (௫௫௪)

சாரத்தைநீக்கித்தனிப்புலியைப்பாயவிட்டு - - *
நீருமலைத்தென்றலென்றீர்நிட்டூரஞ்செய்திட்டீரோ. - (௫௫௫)

காமசரமெல்லாங்கனகமஞ்சமேற்பரப்பிப் - - *
பூமலரென்றீர்மடவீர்பொய்யும்படித்தீரோ. - (௫௫௬)

சேலென்றகேதனத்தோன்றேமாலையைப்பிழிந்து - - *
பாலென்றுதந்தீர்பழிகாரரானீரோ. - - (௫௫௭)

மங்கைநல்லீரின்றென்வனமுலைக்குநீரணிந்த - - *
குங்குமமுஞ்சாந்துங்குளிர்ந்தபனிநீரும். - - (௫௫௮)

தேடிப்பார்த்தையர்பார்த்காதலனைச்செல்லவிட்டு - - *
ஊடுமனையாண்மனம்போற்கொதிக்குதென்றாள் - (௬௬௯)

என்னபுலம்பிப்பிவள்படும்பாடத்தனையும் - - - *
அன்னைக்குச்சொன்னாரவள்பதறியோடிவந்தாள். (௬௭0)

பெற்றெடுத்ததன்மகளைப்பேய்க்கிழவியாளும் - *
குற்றமறநோக்கக்குறிப்புறவேகண்டுகொண்டாள். (௬௭௧)

செவ்வாயிதழ்க்குறியுஞ்செப்பமுலைமேல்பதித்த - *
கைவ்வாருகிர்க்குறியுங்கண்மையழிந்ததுவும். - (௬௭௨)

பார்த்தாளுடன்போனபாங்கியரைச்சண்டையிட்டாள் - *
வேர்த்தாண்மகளைவெகுண்டாள்விசாரமிட்டாள் (௬௭௩)

நீங்களறியாமலிந்தநேரிழையைப்பூக்காவில் - - *
ஆங்கொருவன்கூடியணைந்தவகைசொல்லுமென்றாள். (௬௭௪)

போனதுவும்வெவ்வேறாய்ப்பூவெடுக்கமங்கைதனி - *
ஆனதுவுங்கண்டதுவுமாயிழையார்தாமுரைத்தார். - (௬௭௫)

சந்தமுலையாருரைக்கத்தையல்குணமாலைசொல்வாள் - *
அந்தவனத்திலசுகையுற்றவேளையிலே. - (௬௭௬)

சுற்றியடிபார்த்தேதன்றுரைகளடிபோலதிலே - - *
உற்றசங்கரோகையுடன்பதுமரோகைகண்டேன் - (௬௭௭)

அச்சுவடிகண்டவசுகையுமல்லாற்புவனம் - - - *
மெச்சுநிலைக்கோட்டைவேள்பெரியநாகேந்திரன் - (௩௪௮)

வேட்டைக்குவந்தாலுமேளத்தொனியு மந்தக் - - *
காட்டில்வெடித்தொனியுங்காதாரக்கேட்டதென்றாள். (௩௪௯)

அப்படியோசொல்லென்னமிர்தகுணமாலைமின்னே - *
செப்படிவித்தைத்தொழிலிற்சித்திரத்தைக்கண்டாமே. (௩௫௰)

வண்டார்குழலாய்மதன்பெரியநாகேந்திரன் - - *
கண்டாலுநின்றகரும்பைவிட்டுப்போவானோ - (௩௫௧)

அந்தத்துரையழகைக்கண்டாலுநானின்ற - - *
பைந்தொடியுந்தானொருகைபாராமன்மீள்வாளோ (௩௫௨)

எம்மையறியாமலிவளெப்படிதான்கைகலந்தாள் - - *
நம்மையறியாமலந்தநாயகனெவ்வாறணைந்தான். (௩௫௩)

கன்னமொருவரிட்டார்காவலறோடேயுரைப்பேம் - *
மன்னவனேயிந்தவலுமைசெய்தாலார்க்குரைப்பேம். - (௩௫௪)

பாகார்மொழியாளைப்பன்றிமலைச்சாரலுக்குப் - - *
போகாதேயென்றுசொன்னேன்புத்தியாக்கேட்டாளோ. (௩௫௫)

பேய்வார்த்தையானாலும்பெற்றபிள்ளைகேட்பதுண்டு - *
தாய்வார்த்தைகேளாத்தங்கச்சிரூப்பியாச்சே. - - (௩௫௬)

தெண்டிக்குமன்னவனைச்சேர்ந்தவனுக்காரியையநான் - *
கண்டிக்கப்போகாதேகள்ளியென்னக்கூடாதே. (௫௭)

மானபரன்பெஞ்சைமகாசனைமருவப் - - - *
போனவளையந்நியிவள்பூவெடுக்கப்போனவளோ. (௫௮)

விந்தைதருமொன்பதூர்வேந்தனுக்குமோகினிமா - *
மந்திரமுண்டென்றென்மதலையறியாளோ. - (௫௯)

தூயபுகழ்பெஞ்சைத்துரைக்குநமைப்போன்மடவார் - *
ஆயிரம்பேருண்டென்றரங்கியறியாளோ. - (௬௰)

பூங்கொடிசூழ்தண்டலையிற்பூவெடுக்கப்போனவுயிர்ப் - *
பாங்கிமார்தாமிருக்கப்பாலவதனைச்சேர்வானேன். (௬௰௧)

அந்நாளில்வேதனைமைத்தபடியேயொழிய - - *
மின்னாளாநோவதுவும்வீணேபிதற்றுவதும். - - (௬௰௨)

நம்மையறியாமனடந்ததெல்லாம்யாவருக்கும் - *
சம்மதிக்குங்காரியமேதையனடத்திவந்தான். - (௬௰௩)

மன்னனூருக்கென்மகளேமனையாளாம் - - - *
கன்னியனூருக்குமத்தக்காவலனேகாதலனும் - (௬௰௪)

மாவடுக்கண்மங்கையென்னமாதவமுன்செய்தாளோ - *
பூவெடுக்கப்போனாள்பதையலெடுத்துவந்தாள். - ([illegible])

ப்பப்பழமருவிப்பாலில்விழுந்ததுநான் - - *
செய்ததவமோமகண்முன்செய்தபூசாபலமோ. - (௯௬௬)
என்றுமகளையிருகையாற்றழுவி - - - *
ஒன்றுக்குமஞ்சாதேயோகமுமுன்பங்காச்சே. - - (௩௬௭)
சிந்தமகூளேந்த்ரனருள்செயபெரியநாயகனைச் - *
சொந்தமாக்கூடிச்சுகித்துமிகவாழ்ந்திரென்றாள். - (௯௬௮)
காவலவுமின்னேகனகபல்லக்கேறியிந்தப் - - - *
பூவுலகுகொண்டாடப்புத்திரரைப்பெற்றிரென்றாள். (௯௬௯)
என்னுமந்தவேளைசிலவேந்திழையார்சூழ்ந்துவர - *
வன்னமணிப்பொற்சிவிகைவாயில்வரக்கண்டாளே. (௯௭௰)
கண்டாண்மகளைக்கனகபல்லக்கேற்றிபின்பம் - - *
கொண்டாள்குணமாலைகூடச்செலவிடுத்தாள். - (௯௭௧)
சொற்படியேயந்தத்துரைப்பெரியநாகையனும் - *
கற்பகத்தைக்கூடியவள்காதல்கொண்டகாதலியாய். - (௯௭௨)
பூதலத்தோர்வாழ்த்தநல்லபுத்திரரைப்பெற்றெடுத்து - *
மாதுநவரத்தமாலைமகிழ்வுற்றிருந்தாள். - - (௯௭௩)
சீர்வாழிலோகஞ்செழித்துமிகவாழியென்ப - - *
[illegible]ர்வாழிவெள்ளையுபயக்கொடிவாழி. - - (௩௭௪)
பெஞ்சைநகர்வாழிபெரியநாகேந்த்ரதுரை - - *
பஞ்சமலர்மாதுகருணைபெற்றுவாழியவே. - (௯௭௫)

---

கூளப்பநாயக்கன்காதல் - முற்றிற்று.